


# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)


ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 67 திருவள்ளுவர் ஆண்டு 2056, நளி (கார்த்திகை) – திசம்பர் – 2025

# பொது நூலகத் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Academic libraries | – | கல்வி நூலகங்கள் |
| Accession register | – | சேர்க்கைப் பதிவேடு |
| Author catalogue | – | நூலாசிரியர் பட்டியல் |
| Bay guide | – | நூல் பிரிப்பான் |
| Bibliography | – | குறிப்புதவி நூல்கள் |
| Book borrower | – | நூல் பெறுவோர் |
| Book delivery station | – | நூல் வழங்கு பகுதி |
| Book index entry | – | நூல் அடைவுப் பதிவு |
| Branch library | – | கிளை நூலகம் |
| Business library | – | வணிக நூலகம் |
| Card cabinet | – | அட்டைப் பேழை |
| Children library | – | சிறுவர் நூலகம் |
| College library | – | கல்லூரி நூலகம் |
| Departmental library | – | துறை நூலகம் |
| Encyclopaedia | – | கலைக் களஞ்சியம் |
| Gate register | – | வாயில் பதிவேடு |
| Index card | - | குறியீட்டு அட்டை |
| Lending section | – | நூல் பெறும் பகுதி |
| Library science | – | நூலகவியல் |
| Manuscript library | – | சுவடி நூலகம் |
| Membership card | – | உறுப்பினர் அட்டை |
| Mobile library | – | இயங்கு நூலகம் |
| Reference librarian | – | குறிப்புதவி நூலகர் |
| Return counter | – | நூல் திருப்பித் தருமிடம் |
| Rack | – | நூலடுக்கு |

**சொற்குவை (sorkuvai.tn.gov.in ) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, நளி (கார்த்திகை) திசம்பர் – 2025

ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்தி

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.tn.gov.in

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No : 75 , Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.tn.gov.in

ஐ.எஸ்.பி.என் (ISBN ): 978-81-958032-0-0

# தமிழ்ச் சொற்பிறப்பு அறிவோம் – 'அள்' 'இள்' 'எள்'

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், 'அள்' 'இள்' 'எள்' ஆகிய சொற்களிலிருந்து பல  சொற்கள் கிளைத்து வளர்ந்த முறையினைக் கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளார்.

**அள்**

அள் = நெருங்கு, நெருங்கச் சேர்த்தெடு

அண், அண்ணு = நெருங்கு

அண்மு = நெருங்கு

அண்மை, அணுமை, அணிமை = அருகில்

அணுகு = நெருங்கு

அண்டை = பக்கம்.

அடு = நெருங்கு

அடர் = நெருங்கு

அடவி = நெருங்கின காடு

அடுக்கு = நெருங்கவை

அடுத்த = நெருங்கின, பக்கமான, இன்னொரு

அடை = அடுத்தது, அப்பம். அடை – ஆடை

பாலடை = பாலாடை, சங்கு

அடுக்கும் = நெருங்கும், தகும். 'உனக்கிது அடுக்குமா?'

அடங்கு = நெருங்கு, உள்ளமை

அடக்கு (பிறவினை)

அடக்கம் = ஒடுக்கம், உள்ளீடு, புதைப்பு

அடை = நெருங்கு, சேர், பெறு

(ட = ய) அயல் – அசல் = பக்கம்

**இள்**

இ–இள்

இளை = மூச்சிழு, மெலி

இளைப்பு = மூச்சிழுப்பு, மெலிவு, தளர்ச்சி

இளைப்பு + உளி  = இழைப்புளி

இழை = இழைத்துச் செய்த நகை.

இழைப்பு = ஈளைநோய் (காசநோய்)

இளைத்தவன் = மெலிந்தவன், சிறியவன்

'ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோயில் ஆண்டி'

இளம், இளமை = சிறு பருவம்

இளவல் = தம்பி

இளைஞன் = விடலை பருவத்தன் (வாலிபன்), வீரன்

இளையவன் = ஆண்டிற் சிறியவன்

இளப்பம் = தாழ்வு

இளக்காரம் = மென்மைபற்றி மேற்செல்லல்

இளகு = மெல்லிதாகு

இளக்கம் = மென்மை

இணங்கு = மென்மையாகு, உடன்படு

இலகு = எளிது, கனமின்மை,

இகழ் = எளிமையாய் எண்ணு

எள்

இள் – எள்

எண்மை, எளிமை = வறிய நிலை

எளிது = இலகுவானது (இலேசானது)

எள் = சிறிய கூலம் (தானியம்)

எள்ளு = இகழ்

எள்கு – எஃகு = இளகிய இரும்பு

ஒ.நோ. உருகியது உருக்கு

எய் = இளை, சோம்பு

எ = ஏ

ஏளனம் = இகழ்ச்சி

ஏழை = எளியவன், அறிவிலி

ஏசு = இகழ்

இவ்வாறு தமிழ்மொழியின் சொற்பிறப்பு வரலாறு குறித்து மொழிஞாயிறு பாவாணர் எழுதியுள்ள செய்திகளை நாமும் உணர்ந்து வருங்காலத் தலைமுறையினருக்கும் உணர்த்தி அவர்களின் உள்ளங்களில் தாய்மொழிப் பற்றை விதைப்போம்.

# வீரமாமுனிவர் பிறந்தநாள் விழா!



## தமிழ் வளர்த்த இத்தாலிய பேரறிஞர் **வீரமாமுனிவர் அவர்களின்** பிறந்த நாள் விழா!



தமிழ்நாடு அரசின் சார்பில் **மாண்புமிகு அமைச்சர் பெருமக்கள்** இன்று (08.11.2025) சென்னை காமராஜர் சாலை, மெரினா கடற்கரையில் அமைந்துள்ள அன்னாரது திருவுருவச் சிலைக்கு அருகில் அலங்கரித்து வைக்கப்பட்டுள்ள திருவுருவப் படத்திற்கு மலர் தூவி மரியாதை செலுத்தினார்கள்.

# வழக்குச் சொற்கள் முடிவதில்லை

முனைவர் ஔவை ந. அருள்
இயக்குநர்
தமிழ் வளர்ச்சி இயக்ககம்



பிறமொழிச் சொற்களைக் கண்டறிந்து நீக்க வேண்டுமென்ற துடிப்பு ஒருபுறத்திலும், இவற்றை நீக்க வேண்டியதில்லை என்ற கருத்து மறுபுறத்திலுமாகத் தமிழின் மொழிக்கொள்கை இருவேறு இயல்பாக உருப்பெற்றுள்ளதைப் பல்வேறு முனைகளில் தமிழ் உலகம் அறிந்து வருகிறது.

இந்நிலையில் ஒருசாரார் புதிய அறிவுத்துறைப் பொருண்மைகளைக் குறிப்பதற்குப் பிறமொழிச் சொற்களை எடுத்தாளுதலில் எவ்வகையான தடையும் இருக்கக் கூடாது என்கின்றனர். வேறொரு சாரார் தமிழ்ச் சொற்களைத் தான் எங்கும் நாம் வழங்குதல் வேண்டும் என்று வலியுறுத்தி வருகின்றனர்.

இப்போக்கினைப் பற்றி, "இது முடிந்து விடவில்லை. இந்நிலை என்றேனும் முடிந்துவிடப் போவதும் இல்லை, இது புதிதாக உண்டான ஒரு விவாதமும் அன்று. தமிழ் மொழியில் தொடக்க நிலையிலிருந்தே எப்பொழுதும் இது உள்ளது தான். ஆனால் முன்பெல்லாம் கட்சிப் பிரதிகட்சிகள் இல்லை. வாதப் பிரதிவாதங்களும் இல்லை. பிறமொழிக் கலப்பினால் நமது மொழி பாழாய்விடும் அதைப் பாதுகாத்தற்குத் தமிழ்ப் பாதுகாப்புப் படை ஒன்று வேண்டும் என்று படை திரட்டியதும் இல்லை. எனினும், உள்ளூர அடிப்படையில் இந்த விவாதம் அமைதியாய் நடந்து கொண்டுதான் இருந்தது. நமது தாய்மொழிக்கு மட்டும் இவ்விவாதம் தனி உரிமையுமில்லை; வழக்கிலுள்ள எல்லா மொழிகளிலும் இது காணப்படுவதே" என்றார் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை.

ஒருவர் வாணிகத் துறையில் பணிபுரிகிறார் என்று வைத்துக் கொள்வோம். இவரிடம் விடுமுதல் அதிகமாயில்லை. தம்மிடமுள்ள கைப்பொருளுக்கு ஏற்றபடி சுருங்கிய அளவில் வணிகம் தொடங்குகிறார். இவரிடத்தில் ஐம்பது சரக்குகள் தாம் உள்ளன. இவரைச் சுற்றி வாழும் மக்களுக்குத் தேவையோ இருநூறு சரக்குகள். அச்சரக்கு அவரிடம் இல்லை. அதைக் காட்டிலும் தம்மிடமுள்ள வேறொரு சரக்கு அதிகம் பயனுடையது என்று சொல்லி இச்சரக்கை இவர் கொடுத்து வருகிறார். மக்கள் நிறைவு அடையவில்லை.

இதைக் கண்டதும் அவர்கள் கேட்கும் சரக்கு இதுதான் என்று தம் கடையிலுள்ள பிறிதொரு சரக்கைக் கொடுத்து வருகிறார். மக்கள் நிறைவடையாமல், வாணிகர் மீது மிகுந்த வெறுப்புக் கொள்ளுகிறார்கள்.

இவர் கடையில் வாடிக்கை வைத்துக் கொள்ளாது வேறு கடைக்கு மக்கள் செல்கிறார்கள். வாணிகர் மற்ற கடைகளோடு சமமாகப் போட்டி போட்டு, மக்கள் வேண்டும் சரக்குகளையும் வாங்கி வைத்து அவர்களையும் நிறைவு பண்ணித் தருகிறார். இவ்வணிக நிகழ்ச்சி போன்றதே மொழி வரலாறும்.

சொற்களே சரக்குகள்; மக்கள் தேவைதான் புதிய அறிவுத் துறைகள். ஆனால் வருங்காலத் தமிழைப் பற்றி ஒன்றும் உறுதியாகச் சொல்ல முடியாது. வாணிகர் தனது சரக்குகளைச் செய்தது போலத் தமிழ்மொழியும் உயிர் என்ற சொல்லை எவ்வளவு பயன்படுத்தக் கூடுமோ அவ்வளவும் செய்து விட்டது. ஆனால் "நாழி முகவாது நானாழி". புதுச் சரக்குகளை வாங்கத்தான் செய்தார் வாணிகர்.

அது போல ஆன்மா என ஒன்று உண்டு என்று சொன்னாலும் சரி, சொல்லாவிட்டாலும் சரி, சொல்லளவிலாவது அதனைக் கடன் வாங்க வேண்டியதுதான். கடன் வாங்கிய அச்சொல்லைத் தள்ளிவிட முடியாது என்றும் அவர் குறிப்பதும் சிந்தனைக்குரியது.

பிறமொழிச் சொற்களை முழுவதும் ஏற்பது, அறவே தள்ளி விடுவது என்ற நிலைகளை விடுத்து, இயன்ற வரையில் தமிழாக்கம் செய்தும் தனித்தமிழில் எழுதியும் வரும் நிலை கடந்த 60 ஆண்டுகளாகத் தொடர்ந்து வருகிறது.

பேரறிஞர் அண்ணா இம்முயற்சியில் தாம் எவ்வளவு வெற்றி பெற்றோம் என்பதைக் குறிப்பிடும் போது, "தம்பி பலவற்றை நான் எழுதிய பிறகு அவற்றில் பிறமொழிச் சொற்களின் கலப்பையெண்ணி வருந்தியுள்ளேன் என்னால் இயன்றது அவ்வளவு தான். நீயாவது பிறமொழிச் சொற்கலப்பை நீக்கி எழுதவும் பேசவும் பழகு" எனக் கூறுவது இங்குக் கருதத்தக்கது.

உலக அறிவியல் வளர்ச்சியோடு ஒப்புநோக்கி பேரறிஞர் வா. செ. குழந்தைசாமி குறிப்பிடும் கருத்துகள் ஆழ்ந்த சிந்தனையைத் தூண்டி, மொழிக் கோட்பாட்டில் ஒரு புதிய அணுகுமுறையை நமக்கு அறிவிப்பதாக அமைந்திருக்கிறது.

"தூய்மை, தனித்தன்மை என்பது உயர்ந்த கூறுபாடுகளைக் குறிப்பிடும் சொற்கள். ஆனால், மொழித்துறையில் எது தூய்மை, எது தனித்தன்மை என்பதிலும்,அது எங்கு, எப்படிப் பயன்படுத்தப்பட வேண்டும் என்பதிலும் நமக்குத் தெளிவு வேண்டும். கன்னித் தன்மை தான் தூய்மையுடையது என்பதில்லை. தாய்மையும் தூய்மையானதே.

தன்மை வேறு; தனித்தன்மை வேறு. பலருடன் சேர்ந்து செயற்படும் பொழுது தான், ஒருவரது தனித்தன்மை தெரிகிறது. தமிழ் விண்ணிலிருந்து பிறந்தது அன்று; விண்ணவர் தந்ததும் அன்று; மனித சமுதாயம் படைத்த மொழி; மனித சமுதாயம் வளர்த்த மொழி; மனிதன் படைத்த எதுவும் குறையுடையது; வளர்ச்சிக்கு வழியுடையது; வளர வேண்டிய தேவையுடையது.

எல்லாக் காலத்திற்கும் எல்லாச் சூழ்நிலைக்கும் தேவையான எல்லாவற்றையும், நம் மூதாதையர்கள், மொழியைப் பொறுத்தவரை முடித்துவிட்டுப் போயிருக்கிறார்கள் என்று நாம் எண்ணவோ, நம்பவோ இடமில்லை.

தமிழும் உலகிலுள்ள மற்றைய மொழிகளைப் போன்றதே. ஒவ்வொரு மொழிக்கும் சில சிறப்புகள் இருக்கலாம். தமிழுக்குச் சில சிறப்புகள் கூடுதலாகவே இருக்கலாம். இருப்பினும், வளர்ந்த நாட்டினர் தம் மொழி வளர்ச்சி, அதில் அவர்கள் கடைப்பிடித்த முறை, அவர்கள் கண்ட அனுபவம் ஆகியன சிறிய அளவிலோ, பெரிய அளவிலோ நமக்கும் பயன்படும்; பயன் தரும்.

நமது மொழி மற்ற மொழிகள் அனைத்திற்கும் அப்பாற்பட்ட இயல்பும், சிறப்பும் உடையது என்பது போன்ற பார்வையோடும், மற்ற மொழியினர் அனுபவம் நமக்குத் தேவையில்லை, அல்லது பயன்படாது என்னும் மனநிலையோடும், காதும், கருத்தும் மூடிய நிலையில் இருந்து கொண்டு எழுதுவதும், பேசுவதும் தக்க பாதையாகாது.

முன்னேறியுள்ள நாடுகளின் கடந்த கால அனுபவங்களை ஆய்ந்து, அவற்றை இயன்ற வழியில், தேவையான மாற்றங்களோடு பயன்படுத்தி, அதன்வழி நாம் பயன் பெறவேண்டும் என்ற நோக்கம் நமக்கு வேண்டும்".

அருந்தமிழில் அயற் சொற்களை ஆய்வு செய்த வகையில், எதிர்கால நலன் கருதி நாம் ஏற்கத் தக்கதாகத் துணைவேந்தர் வா. செ. குழந்தைசாமி கருத்து அமைகிறது.

எனினும், அயல்மொழிச் சொற்கள் வழக்கில் வந்தமை கருதி, பொதுமக்களுக்கு என்று எழுதும் நூலில் பலவாகப் பிறமொழிச் சொற்கள் அமையுமானால், அவர்களுக்கு என்ன விளங்கும்?

கல்லூரியில் பாடநூல்கள் வேறு, பொதுமக்கள் படிக்கும் நூல்கள் வேறு.

பொதுமக்களுக்கு அவர்கள் அறிந்த சொற்களைக் கொண்டே தெளிவாக எழுதி நாம் விளக்க வேண்டும். இங்கே மணிப்பிரவாள நடை பயன்படாது. இதனாலேயே இந்த நாட்டுப் பழைய மணிப்பிரவாள நடை வேர்கொள்ளாது மறைந்து விட்டது.

உலகம் போகின்ற போக்கில், பொதுமக்கள் மக்களாட்சியில் சிறந்த இடம் பெற வேண்டுமானால், உலக அறிவை எல்லாம் ஒரு வகையாக அவர்கள் எளிமையாகப் பெற்றே தீரவேண்டும்.

கலைச் சொற்கள் எல்லாம் தமிழ்ச் சொற்களாக அவர்கள் வாயிலும் காதிலும் இனிக்கின்ற காலம் அமைய வேண்டும். முற்காலத்தில் மணிப்பிரவாள நடையில் எழுதினாலன்றிச் சில கருத்துகளை விளக்கவே முடியாதென்று அறிஞர்கள் சிலர் கருதினார்கள்.

ஆனால் நாளடைவில் அந்த அறிவையெல்லாம் எளிய தமிழில் எழுதிக் காட்டக்கூடும் என்ற நிலை ஏற்பட்டபோது, மணிப்பிரவாள நடை தானாவே மறைந்து போனது.

இலத்தீனில் தான் கருத்துகளைத் தெரிவிக்க முடியுமென்று நியூட்டன் எழுதினார். இப்போதோ அந்த நிலைமாறி ஆங்கிலத்தில் எழுதும் காலம் அமைந்து விட்டது.

அந்த நிலை தமிழில் ஓராண்டில் ஈராண்டில் வாராது. எனினும், கற்றவர்கள் பொதுமக்களுக்காக எழுதும் போது இந்த நிலை படிப்படியாக வளரும். அதுவரையிலும் ஆங்கிலத்தமிழ் மணிப்பிரவாள நடை வழக்கத்தில் இருந்து கொண்டு தான் வரும்.

பாவேந்தர் பாரதிதாசன் பல புதிய சொல்லாக்கங்களை நமக்கு வழங்கிய போதிலும் அவரும், மியூசியம், தியேட்டர், இண்டியன், ரெயில், இந்தியன் பார்லிமெண்டரி, கவர்னர் ஜெனரல், கோர்ட், எலக்சன், கொம்மூன், எலச்சியம், அத்மினிஸ்ராத்தேர், பிரெஞ்சு, சர்க்கார், போஸ்த், பிரிட்டிஸ், ஹைதராபாத், பிர்க்கா, தாலுக்கா, ஸ்தலஅதிகாரி, காண்டிராக்ட்,

பம்பாய், கிராணிக்கல், பிரிபிரஸ் ஜர்னல், நேஷனல் ஸ்டாண்டர்ட், ரிமாண்டு, கமிஷன், கார்ப்பரேஷன், மோட்டார், சோஷலிஸ்டுகள் போன்ற ஆங்கிலச் சொற்களைத் தம்முடைய படைப்புகளில் சேர்க்க நேர்ந்ததை எண்ணிப் பார்க்கலாம்.

"ஆங்கிலம் என்பது ஆங்கிலேயர் மொழி என்னும் பொருளுடையதன்று. ஆங்கில மொழி இன்றைய நிலைக்கு உலக வளர்ச்சியில் புதுமையின் வடிவமாக, புதுமையின் வாய்க்காலாக அமைகிறது. அதனைத் தமிழ்நிலத்தில் பாய்ச்சிக் கொள்வதில் கேடொன்றுமில்லை. பழையன இங்கு நிறைய உண்டு. எல்லாம் செழிப்பாக வளர்வதில் என்ன ஐயம்?" எனப் பேராசிரியர் தெ. பொ. மீ. வினவுவது, வருங்காலம் நோக்கித் தமிழில் ஆங்கிலக் கலப்பு நிகழ்வதைத் தவிர்க்க இயலாது என்பதைத் தெளிவாக்குகிறது.

அறிவுத்தளத்தில் ஆங்கிலத்தை முற்றிலும் புறக்கணித்துச் செயலாற்றவியலாது என்பதனை மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரும் உரிய காரணங்களோடு எடுத்துரைத்துள்ளார். 'ஆங்கிலத்தை அகற்றுவது அறிவுடைமையா?' என்ற தம் கட்டுரையொன்றில், "ஓர் உலகப் பொதுமொழிக்கு இருக்க வேண்டிய இயல்புகளெல்லாம் ஆங்கிலத்திற்கு ஒருங்கே அமைந்துள்ளன. ...நாகரிக வுலகிலுள்ள எல்லாக் கலைகட்கும் நூல்கட்கும் உரிய சொற்களெல்லாம் ஆங்கிலத்தில் உள்ளன. ஞாலத்தில் மேலையர்க்குத் தெரிந்த எல்லாப் பொருள்களும் ஆங்கிலத்திற் பெயர் பெற்றுள்ளன. ...ஆதலால் அறிவியன் மொழிக்கும் அன்மொழிக்கும் வேறுபாடறிந்து, ஆங்கிலத்தைக் கடைப்பிடிக்க" என்று குறித்துள்ளார் தேவநேயப் பாவாணர்.

மேற்குறித்த அறிஞர்தம் கருத்துகளையெல்லாம் ஆழ உள்வாங்கினால் மொழிப் பயன்பாடு குறித்த தெளிநிலை நமக்குள் புலப்படும். சொல்வளம் மிகுந்த அருந்தமிழில் கலைச்சொல்லாக்கம் செய்கையில் மக்களுக்குப் புரியும் வகையில் எளிமையாக – சுருக்கமாக அச்சொற்கள் அமைந்திட வேண்டும். பல்வேறு துறைகள் சார்ந்து ஆங்கிலத்திலுள்ள குறியீடுகள், அறிவியலறிஞர்களின் பெயர்களால் வழங்கப்பெறுகின்ற விதிகள் – கருவிகள் – கண்டுபிடிப்புகள், நிறுவனங்களின் பெயர்கள் உள்ளிட்ட சிலவற்றை ஆங்கிலத்தில் உள்ளபடியே ஒலிபெயர்ப்பாகப் பயன்படுத்தலாம். மற்றபடி, கலைச்சொல்லாக்கம் செய்ய இயலுகின்ற அனைத்தையும் அருந்தமிழால் செய்து, மக்களின் பயன்பாட்டுக்கு வழங்கலாம்.

இவற்றையெல்லாம் நுண்ணாய்ந்துதான், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் வாயிலாகச் 'சொற்குவை' என்ற அருமையான ஓர் திட்டத்தினைத் தமிழ்நாடு அரசு செயற்படுத்தி வருகிறது.

இத்திட்டத்தின் வாயிலாக, சொற்பிறப்பியல் பேரகரமுதலி, ஆட்சிச்சொல் அகராதி, தமிழ் இணையக் கல்விக் கழகக் கலைச்சொல் அகராதி, சொல் அகராதி உள்ளிட்ட பல்வேறு அகராதிகளிலுள்ள கலைச்சொற்களைத் தொகுத்தும், அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக் கழகம் வாயிலாகப் புதிய கலைச்சொற்களை வடிவமைத்தும், நாளிதுவரை 15,49,495 தமிழ்ச் சொற்கள் www.sorkuvai@tn.gov.in என்ற வலைதளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மேலும் நாள்தோறும் செய்தித் துறை வாயிலாக 10 ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்கள் நாள்தோறும் புலனம் வழியாக கடந்த 150 நாள்களாகப் பதிவேற்றம் செய்யப்பட்டு வருகின்றன. இதேபோல் அகரமுதலி இயக்ககத்தால் கடந்த 3 திங்களாக 'நாளும் விளையும் சொற்கதிர்' என்ற பெயரில் நாள்தோறும் ஒரு கலைச்சொல் அதற்குரிய படத்துடன் செய்தித்துறை வாயிலாக வெளியிடப்பட்டுவருகிறது. செந்தமிழைச் செழுந்தமிழாக்கும் இப்பணிகளை இளையோர் பெரிதும் விரும்பி, பாராட்டி வருகின்றனர்.

# இயன்மொழியும் திரிமொழியும்



**முனைவர் இரா.கு.ஆல்துரை**
தமிழ்நாட்டரசின் வீரமாமுனிவர் விருதாளர்

### உறவு மொழிகள்

ஒரு மொழி பெரிய பரப்பில் பேசப்படுவதாக இருக்கும்பொழுதும் ஒரு மொழி பேசும் மக்கள் வெவ்வேறு பகுதிகளுக்கு இடம்பெயரும் பொழுதும் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு வகையாக மொழி மாறும். இதன் விளைவாகப் பல உறவுள்ள மொழிகள் உருவாகும். உறவுள்ள மொழிகள் எல்லாம் இவ்வகைகளிலேயே உருவாகியுள்ளன என்று உய்த்துணரலாம். உறவுள்ள மொழிகள் பிரிவதற்கு முன் இருந்த நிலையைக் காட்டுவதற்குரிய எழுத்துப்பதிவுகள் இருந்தால் அவற்றை வைத்து அறிந்துகொள்ளலாம். எழுத்துப்பதிவுகள் இல்லாத நிலையில், உறவுள்ள மொழிகள் பிரிவதற்குமுன் வழக்கில் இருந்த மொழியை அறிய இயலாது. இந்த எழுத்துப்பதிவு பெறாத உறவுள்ள மொழிகளைப் பெற்ற மொழியே இயன்மொழி(Primitive language) ஆகும் (Bloomfield 1996:13).

### வரலாற்று மொழியியல்

மொழி காலந்தோறும் மாறும் இயல்புடையது. இவ்வியல்பை உலக மொழிகள் அனைத்திலும் காணலாம். இலக்கியம் அமையாமல் வெறும் பேச்சு மொழியாக இருக்கும் மொழியில் ஏற்படும் மாற்றத்தைக் கணக்கிட்டறிய இயலாது. மாற்றம் நிகழ்கிறது என்றாலும் குறைந்தது ஒரு தலை முறையினர் பேசும் பேச்சு அடுத்த தலை முறையினர்க்குப் புரியும் வகையில் மொழி இருக்கும். இவ்வடிப்படையில் பார்த்தால் மாற்றத்தின் வேகம் குறைவாக இருப்பது தெரிய வரும். இல்லையேல் பெற்றோர் பேசுவது தம் பிள்ளைகளுக்குப் புரியாததாக இருக்கும். ஒரு மொழியில் ஏற்படும் மாற்றத்தை அம்மொழியில் அமைந்துள்ள இலக்கியங்களைக் கொண்டு அறியலாம். மொழி மாற்றத்தை அடிப்படையாக வைத்து எழுந்ததே வரலாற்று மொழியியல் என்னும் துறையாகும்.

### மொழி மாற்றம்

பேச்சு மொழியை நோக்க இலக்கிய மொழியின் மாற்றம் மிகக் குறைவு. அதிலும் மொழி மாற்றத்தை இலக்கியங்கள் பெருமளவில் கட்டுப் படுத்துகின்றன. மொழி மாறும் இயல்புடையது என்றாலும் எல்லா மொழிகளும் ஒரே சீராக மாறும் என்று சொல்ல வியலாது. மொழி மாற்றத்திற்குப் பல்வேறு காரணங்கள் உண்டு. பிறமொழிக் கலப்பும் மொழி மாற்றத்திற்கு ஒரு காரணம் ஆகும். சில மொழிகளில் மாற்றம் வேகமாக இருக்கும். சில மொழிகளில் மாற்றம் மிகச் சிறிய அளவினதாக இருக்கும். ஒரே மொழியிலும் வெவ்வேறு காலங்களில் மாற்றத்தின் வேகம் வெவ்வேறு அளவினதாக இருக்கும்.

பிறமொழிகளை நோக்க தமிழில் மாற்றத்தின் வேகம் குறைவு. அதனால்தான் 'என்றுமுள தமிழ்', 'கன்னித்தமிழ்' என்பன போன்று உயர்வு கொடுத்துப் போற்றப்படுகிறது எனலாம்.

### ஒருபொருட் பன்மொழி

தமிழ் சொல்வளமுடைய மொழி. இது, முன்னர் பெரு நிலப்பரப்பில் பேசப்பட்டு வந்த மொழி. பல்வேறுபட்ட தொழில்களை மேற்கொண்ட மக்கள் இம்மொழியைப் பேசி வந்துள்ளனர். நீண்ட வரலாறு உள்ள மொழி தமிழ். இலக்கியச் செழுமை கொண்ட மொழி. இதன் இலக்கிய வரலாறும் நெடியது. ஆகையால் இம்மொழியில் ஒரு பொருட் பன்மொழிகள் காணப்படுவது இயல்பே.

"தமிழல்லாத திராவிட மொழிகளின் அகராதிகளை ஆயும்போது, தமிழிலுள்ள ஒருபொருட் பலசொல் வரிசைகள் அவற்றில் இல்லாக் குறை எந்தத் தமிழறிஞர்க்கும் மிகத் தெளிவாகத் தோன்றும். தமிழில் மட்டும் பயன்படுத்தப்பட்டுத் தமிழுக்கே சிறப்பாக வுரியனவாகக் கருதப்படும் சொற்கள் மட்டுமன்றி, தெலுங்கு, கன்னடம் முதலிய பிற திராவிட

மொழிகளுக்குரியனவாகக் கருதப்படும் சொற்களும் தமிழில் உள. எடுத்துக்காட்டாக: பேச்சு வழக்குத் தமிழில் இருப்பிடத்தைக் குறிக்கும் சொல் 'வீடு' என்பது; ஆனால், இதனொடு தெலுங்கிற்குரிய 'இல்' என்னும் சொல்லும், கன்னடத்திற்குரிய 'மனை' என்னும் சொல்லும், இனி இவற்றோடு வடமொழிக்கும் பின்னிய (Finnish) மொழிகட்குமுரிய 'குடி' என்னும் சொல்லும் தமிழகராதியிற் குறிக்கப்பட்டுச் சில சமயங்களிற் பயன்படுத்தவும் பெறுகின்றன. இங்ஙனமாகத் தமிழ் இலக்கணமும் அகராதியும், திராவிட மொழிகளின் அமைவுகட்கும் வேர்ச்சொற் கட்கும் ஒரு பெரும்பொதுக்களஞ்சியமாகும்" (Caldwell 1987: int.84-85, மொழிபெயர்ப்பு பாவாணர் 2000:58).

ஒவ்வொரு மொழி வடிவமும் ஒரு நிலையான, குறிப்பிட்ட பொருளைக் கொண்டுள்ளது என்பது ஓர் அடிப்படை கணிப்பு. வடிவங்கள் ஒலிப்பு அடிப்படையில் வேறுபட்டால், அவற்றின் பொருள்களும் வேறுபட்ட வையாக இருக்க வேண்டும் என்று கருத வேண்டும். சுருக்கமாகச் சொன்னால், உண்மையான ஒத்த சொற்கள் அதாவது ஒருபொருட் பன்மொழிகள் எதுவும் இல்லை என்று வைத்துக்கொள்ள வேண்டும் (Bloomfield 1996:145). அவ்வாறு என்றால் இருப்பிடத்தைக் குறிக்கும் இச்சொற்களுக்கிடையே நுண்ணிய வேறுபாடு இருக்க வேண்டும் என்பது வெளிப்படை.

"எம்மொழியிலும் ஒரு பொருட்குப் பல சொற்களிருப்பின், அவை யாவும் பருப்பொருளில் ஒத்திருப்பினும் நுண்பொருளில் ஒத்திரா. ஆகவே, ஒருபொருட் பலசொற்களெல்லாம் நுண்பொருள் வேறுபாட்டை யுடையன" (பாவாணர் 2000:36). அவ்வகையில், நிலையான உறைவிடத்தைக் குறிக்கும் வீடு என்னும் சொல்லின் ஒருபொருள் பன்மொழிகளுக்கிடையே காணப்படும் நுண்பொருள் வேறுபாட்டை விளக்குவார் பாவாணர்.

## வீட்டுவகை

வீடு நிலையான உறைவிடம்; மனை வீட்டு நிலம் (ஆட்சிப் பொருள்); இல், இல்லம் வளமான வீடு; அகம் உள்வீடு; உறையுள் தங்குமிடம்; குடிசை தாழ்ந்த சிறு கூரைவீடு; குடில் இலையால் வேய்ந்த சிறு குடிசை; குடிலம் பெருங்குடில் (பர்ணசாலை); குடிகை சிறு கோயில்; குச்சு வீடு சிறு கூரைவீடு; மச்சுவீடு மெத்தை வீடு (terrace); கூடு நெற்கூடு போல் வட்டமான சிறு வீடு; கொட்டகை சுவர் அல்லது நெடுஞ்சுவர் இல்லாத நீண்ட கூரைவீடு; கொட்டில் தொழுவம் அல்லது ஆயுதச்சாலை; சாலை பெருங்கூடம்; வளவு ஒருவருக்குச் சொந்தமான பல வீடுகள் சேர்ந்த இடம் ; வளைசல் வீடு முதலியவற்றின் சுற்றுப்புறம் அல்லது சூழ்நிலம்; வளாகம் ஆதீனம்; மாளிகை மாண்பான பெருவீடு; மாடம் மேனிலை; மாடி மேனிலை வீடு; குடி ஒரு குடும்பம் அல்லது குலம் வசிக்கும் தெரு அல்லது வீட்டுத் தொகுதி; அரண்மனை அரண் அல்லது பாதுகாப்புள்ள அரசன் மனை; பள்ளி படுக்கும் வீடு; மடம் துறவிகள் தங்கும் பெருங்கூடம் அல்லது மண்டபம் (பாவாணர் 2000: 45- 46).

"பண்டையமொழிகளில்எல்லாவற்றிற்கும் பல பெயர்கள் இருந்துள்ளன. மாந்தனுக்கும் பல பெயர்கள் இருந்துள்ளன. கவனிக்கும் மனத்தைத் தாக்கும் தனித்தன்மை பொருந்திய சிறப்பியல்பு ஒரு புதிய பெயரை உருவாக்கிவிடுகிறது. சூரியனைப் பொலிவு, வெப்பம், காவலர், அழிப்பவர், ஓநாய், அரிமா, விண்ணின் கண், ஒளி வாழ்வு ஆகியவற்றின் தந்தை என்பன போல அழைக்கலாம். ஆகையினால் பண்டைய பேச்சுவழக்குகளில் மிகுதியான ஒருபொருள் சொற்கள் உருவாகியுள்ளன. இந்த ஒரு பொருள் சொற்களுக்கிடையே தொடர்ந்து வழக்கில் இருப்பதற்குப் போட்டி இருந்துள்ளது. வலிமை குறையுடைய சொற்கள், குறைந்த மகிழ்ச்சி தரும் சொற்கள், குறைந்த வளமுடைய சொற்கள் அழிவுக்கு உள்ளாகியுள்ளன. இப்போட்டியில் ஒன்று வெற்றிபெற்று விடுகிறது. இவ்வகையிலேயே மொழிகளில் ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு சொல் ஏற்கப்பட்டு வழக்கு பெற்றுவிடுகின்றது" (Max Muller, 1862:320). இதன் அடிப்படையில் சொல்லவேண்டு மென்றால் பொருள்கள் அனைத்தும் ஒருபொருள் பன்மொழி யுடையனவாக இருந்து பின்னர் ஒரு பொருளுக்கு ஒரு சொல் என்னும் நிலையை எட்டியுள்ளது எனக்கொள்ள வேண்டும். எவ்வாறா யினும் ஒரு பொருட் பன்மொழி என்பது மொழியின் இயல்புகளில் அடிப்படையான ஒன்று என்பது வெளிப்படை. ஒருபொருட் பன்மொழி என்பது ஒரு மொழியில்

உள்ள ஒரு சொல்லுக்கு அல்லது ஒரு சொற்றொடருக்கு அதே மொழியில் அதே பொருளில் அல்லது கிட்டத்தட்ட அதே பொருளில் இருக்கும் மற்றொரு சொல் அல்லது சொற்றொடர் ஆகும்.

## இயன்மொழி

பிற மொழித்துணை இல்லாது தனித்தியங்கும் தன்மை வாய்ந்தது தமிழ். ஆனால், திராவிடக் குடும்ப மொழிகளுள் இலக்கியம் அமைந்த மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் வடமொழி யிலிருந்து அளவிறந்து கடன்பெற்றுள்ளன. அம்மொழிகள் வடசொற்களை முழுவதுமாக நீக்குவதற்கு இயலாதவையாக இருக்கின்றன. ஆனால், தமிழின் தன்மை அத்தகையதன்று. தமிழில் வடமொழிக் கலப்பு அம்மொழிகளை நோக்க மிகக் குறைவு. திராவிட மொழிகளுள் இலக்கிய வளம் பெறாமல் வெறும் பேச்சு மொழிகளாக இருக்கும் திருந்தாத் திராவிட மொழிகளில் வடமொழிக் கலப்பு மிகமிகக் குறைவு. அல்லது இல்லை என்றே சொல்லலாம். வடமொழி யின்றித் தனித்தியங்கும் திராவிட மொழிகளின் இயல்பைக் குறிப்பதற்கு இத்தன்மையை அடிப்படையாகக் காட்டியுள்ளார் திராவிட மொழிகளுக்கு ஒப்பிலக்கணம் வரைந்த கால்டுவெல்லார்.

இலக்கிய மொழிக்கும் பேச்சு மொழிக்கும் இடையே வேறுபாடு அனைத்து மொழிகளிலும் காணக்கிடக்கின்றது. இதற்குப் பல காரணங்கள் உண்டு. அக்காரணங்களுள் முதன்மையானதாக இலக்கியம் என்றும் சற்றுப் பழமைப்பிடிப்புடன் இருக்கும் என்னும் இயல்பைக் காட்டுவர். இலக்கியம் நன்கு சிந்தித்து எழுதுவதற்கு இடமளிக்கிறது. அதனால் அங்குப் பல நலங்கள் அமைவதற்கு வாய்ப்புகள் மிகுதி. பேச்சில் ஒரு சிலர் வேண்டு மானால் நயத்துடன் பேசும் வல்லமை பெற்றிருக்கலாம். அது எல்லோருக்கும் இயல்பாய் அமையாது. பேச்சு உடனுக்குடன் தெரிவிக்க வேண்டியிருப்பதால் அங்கு ஆழ சிந்தித்துப் பேசுவதற்கு இடமில்லை.

## மொழித் தூய்மை

மொழித் தூய்மைக் கொள்கை ஏறக்குறைய எல்லா மொழிகளுக்கும் பொருந்தும். மொழித்தூய்மை என்ற அளவுகோலை மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளுக்குப் பயன்படுத்தினால் முதலில் அங்குள்ள வடமொழிச் சொற்கள் அனைத்தும் நீங்கிவிடும். மொழிக்கலப்பு இல்லாத நிலையில் அவை தமிழின் தன்மையுடன் பெருமளவில் ஒத்துவருவனவாக இருக்க வேண்டும். இருந்தாலும் அந்நிலையைத் தமிழுடன் ஒப்பிட்டால் அவை தமிழைப் போன்று முழுமையாக அமையா. பேச்சுத் தமிழைத் திராவிட மொழிகளின் அந்நிலையுடன் ஒப்பிட்டால் ஒப்புமை அதிகம் காணப்படும். வடசொற்கள் அனைத்தும் நீங்கிய பின்னும் திராவிட மொழிகள் தமிழின் தன்மைபோல் காணப்படாததற்கு அம்மொழிகளில் திரிந்த தன்மைகள் காணப்படுவது காரணமாக அமையும். தமிழின் தன்மை இயல்பாய் இருக்கிறது. இதனால்தான் தமிழை இயன்மொழி என்று அழைத்தார் பாவாணர். இயல்புநிலையிலிருந்து திரிந்த தன்மையனவாக இருக்கும் திராவிடமொழிகளைத் திரிமொழிகள் என்றார் அவர்.

இத்தன்மையைச் "செருப்பு, திருப்பி, நெருப்பு, பருப்பு என்பன முறையே செப்பு, திப்பு, நிப்பு, பப்பு எனத் தமிழில் வழங்கின் வழுநிலையாம். தெலுங்கில் வழங்கின் வழா நிலையாம்" என்பன போன்று சான்றுகளைக் காட்டி விளக்குவார் பாவாணர் (1990: 286). மேலும் புதுப் பெருக்கு நீரைக் குறிக்கும் வெள்ளம் என்னும் சொல் தன் சிறப்புப் பொருளையிழந்து நீர் என்னும் பொதுப் பொருளில் மலையாளத்தில் உள்ளதையும், விடை சொல்லுதலைக் குறிக்கும் செப்பு என்னுஞ் சொல் தன் சிறப்புச் பொருளையிழந்து சொல்லுதல் என்னும் பொதுப் பொருளில் தெலுங்கில் இருப்பதையும், பொருள் நிலையில் மாறியுள்ளதற்குச் சான்று காட்டுவார் அவர் (பாவாணர் 1990:14).

இயன்மொழி என்பது இயல்பாய் அமைந்தமொழி. இயன்மொழியி லிருந்து திரிந்தவை திரிமொழிகள். இயன்மொழியின் இயல்பு பழைமையை அல்லது செம்மையைக் காட்டும். ஆனால் திரிமொழிகள் திரிந்தனவற்றையே பழைமையாகவும் இயல்பானவை யாகவும் காட்டுகின்றன. திரிந்தவற்றிற்கான இயல்பு நிலையை அவ்வக் காலத்தில் கொள்ளாமல் இருந்ததனால் இன்று தனித்தனி மொழிகளாகி விட்டன அவை. இதே நிலையைப் பேச்சுத் தமிழுக்குப் பொருத்தி ஆராய்ந்தால் அதன் தன்மை நன்கு விளங்கும். இயன்மொழி யினின்று திரிபை நோக்கிச் செல்லும் பேச்சு வழக்கையும் செவ்வை

வழக்கிற்குக் கொண்டு செல்ல வேண்டும். அதுவே இயன்மொழி நிலையை என்றும் தக்க வைத்துக் கொள்ளும் வழியாகும்.

"திரிபிற்கு ஓர் எல்லையுமில்லை; ஒரு தனிப்பட்ட வகையுமில்லை. திரிமொழிகள் பல்வேறு வகையில் மேன் மேலுந் திரியத்திரிய, புதுப் புதுமொழிகள் தோன்றிக்கொண்டே அல்லது பிரிந்துகொண்டே போகும். இதனால், ஓர் இயன்மொழிக்கும் அதன் திரிமொழிகட்கும் இடைப்பட்ட உறவு அல்லது தொடர்பு, திரிபின் அளவிற்கேற்ப நெருங்கியோ நீங்கியோ இருக்கும். திரிமொழிகட்குள்ளும் ஒரு தாய் மொழிக்கும் அதன் கிளைமொழிகட்கும் இடைப்பட்ட உறவும் இத்தகையதே" (பாவாணர் 1967 :முன்.29).

## நிலைப்புத் தன்மை

மொழி மாற்றங்களுக்கிடையே மொழியில் ஒருவகை நிலைப்புத் தன்மையும் நிலவுகிறது. தமிழல்லாத திராவிட மொழிகளில் மாற்றம் அதிகம். தமிழில் மாற்றம் குறைவு. அதே போல் தமிழல்லாத திராவிட மொழிகளில் நிலைப்புத்தன்மை குறைவு. தமிழில் நிலைப்புத் தன்மை அதிகம். இதற்குப் பழைமையான இலக்கியங்கள் இருத்தல், மொழிப் பற்றுள்ளோரின் முயற்சி போன்றன காரணங்களாக அமைகின்றன. இதைப் பாவாணர் நோக்கில் சொல்ல வேண்டும் என்றால் இயல்பாய் தோன்றிய இயன்மொழி தமிழ். ஆகையால் அதில் நிலைப்புத் தன்மை மிகுதியாக இருக்கும். அவ்வியன்மொழி திரிபிற்கு இடமளித்துவிட்டால் மாற்றம் மிக்கு நிலைப்புத் தன்மை குறைந்துவிடும் என்று சொல்ல வேண்டும்.

பாவாணரது மொழித்தூய்மை விருப்பம் தமிழோடு நிற்கவில்லை. திராவிட மொழிகளிலும் மொழித்தூய்மை போற்றப்பட வேண்டும் என்பார் அவர். மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளின் இலக்கியங்கள் பேணிக் காக்க வேண்டும் என்கிறார் அவர். அதேபோல் தமிழிலக்கியங்களைப் பிற திராவிட மொழியாளர்களும் போற்ற வேண்டும் என்பார் அவர். தமிழல்லாத பிற திராவிட மொழி யாளர்கள் தமிழ் இலக்கியங்களைக் கற்பாராயின் அவர்கள் மொழியின் பழைமை, திரிந்துள்ள தன்மை ஆகியவற்றை அறிந்து கொள்வர்.

செந்தமிழும் கொடுந்தமிழும் சேர்ந்தது தமிழ். பழைய கொடுந் தமிழ்களே இன்றைய திராவிட மொழிகள். ஆனால் தமிழில்தான் தூயதான, பழைமையான, இயல்பான, பல்துறைப்பட்ட, உயர்நிலைக் குரிய இலக்கியங்கள் உள்ளன. தமிழும் திராவிட மொழிகளும் முறையே இலக்கியத்திலும் சொல்லிலும் ஒன்றுக்கொன்று உதவும் நிலை தாயும் மக்களும் போலவாகும் என்பார் பாவாணர். அவை ஆரியச் சார்பை இயன்றவரை அகற்றிவிட்டுத் தமிழைத் தழுவ வேண்டும் என்பார் அவர்.

திராவிட மொழிகளைத் தமக்கே உரிய சிறப்பான வகையில் இயன்மொழி, திரிமொழி என்று பிரித்து அவற்றின் தன்மைகளை விளக்கியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## மொழித்திரிபு

"காலக் கடப்பினால் மட்டுமன்றி இடச்சேய்மையினாலும் மொழிகள் திரிகின்றன. தமிழ் போன்ற இயன்மொழியில்தான் செம்மை என்னும் வரம்பிட்டு, இலக்கிய வாயிலாகவும் உயர்ந்தோருலக வழக்கு வாயிலாகவும் அதன் திரிபைத் தடுக்க முடியும். தெலுங்கு, மராத்தி, இந்தி, ஆங்கிலம் பிரெஞ்சு முதலிய திரிமொழிகளெல்லாம் திரிபினாலேயே தோன்றியுள்ளன. ஆதலால், அவற்றின் திரிபைத் தடுக்குமாறும் விலக்குமாறும் இல்லை. திரிபை நீக்கிவிடின் திரிமொழிகள் அவ்வம்மொழிகளாகா. தெலுங்குத் திரிபை நீக்கிவிடின் அது, தமிழாய்விடும். அங்ஙனமே பிரெஞ்சுத் திரிபை நீக்கிவிடின், அது இலத்தீனாகிவிடும்" (பாவாணர் 1967 :முன்.28).

## கருவி நூல்கள்


1.பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்) 1990, தமிழ் வரலாறு, கழகம், சென்னை (முதற்பதிப்பு 1967).

2.பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்), 2000, சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்(முதற்பதிப்பு 1949).

3.பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்), 1967, வடமொழி வரலாறு, நேசமணி பதிப்பகம்

4.Bloomfield, Leonard, 1996, Language, Motilal Banarsidas, Delhi (first published 1935).

5.Caldwell, Robert, 1987, A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, AES, New Delhi (First published 1856)

6.Max Muller, F., 1862, The Science of Language, Charles Scribner, 124 Grand Street. New York:

# கைது!

முனைவர் ஆ. அரிமாப்பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"சோதனை மேல் சோதனை போதுமடா சாமி
வேதனை தான் வாழ்க்கை என்றால் தாங்காது பூமி
சொந்தம் ஒரு கை விலங்கு நீ போட்டது அதில்
பந்தம் ஒரு கால் விலங்கு நான் போட்டது"
(கண்ணதாசன், தங்கப் பதக்கம்).

******

'அவனைக் கையைக் கட்டித் தரதரவென்று இழுத்து வா' என்பார்கள்.
சிறை பிடிப்பதன் முதற்படி கையைக் கட்டுதல், கையைப் பிணித்தல், கையைத் தளையிடல்.

கைகளைக் கட்டிவிட்டால் ஓட முடியாது என்பதால் கைகளைக் கட்டிக் குற்றவாளியின் இயக்கத்தைத் தளைப்படுத்துவது முதற்கட்ட வழக்கம்.

தள் – தடு – தடுத்தல் – தடை.
தள் – தட்டல் = ஒன்றின் இயக்கத்தை மற்றொன்று தடுத்தல்.
இரண்டு கை தட்டினால் தான் ஓசை வரும். ஒரு கை ஓசை தராது!

தட்ட இசை தருவது தாளம்,
பொருளின் விளைச்சல், வரத்துத் தடை பட்டால் ஏற்படுவது தட்டுப்பாடு.

தம் கட்டுப்பாட்டில் போர்மறவர்களை வைத்துப் பயிற்சி தரும் இடம் – படைத்தளம்.
கொற்றவனுக்கு உரிமையான தளம் – கோட்டை, கொற்றளம் (கொத்தளம்).
இவற்றுக்குத் தலைவன் தளப்பதி > தளபதி!
(கப்பல் தலைவனைக் 'கலபதி' என்று கூறும் சாண்டில்யன் புதினங்கள்)!

தள் – தளை – தட்டல் – தளையிடு.

ஒ. நோ: கள் – களை – கட்டல் = களைதல், களையெடுத்தல் – களை கட்டல்.

"கொலையில் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனோடு நேர்" (திருக்குறள் – 550).

"நாள் அன்று போகி, புள் இடை தட்ப,
பதன் அன்று புக்கு, திறன் அன்று மொழியினும்,
வறிது பெயர்குநர் அல்லர் நெறி கொளப்
பாடு ஆன்று, இரங்கும் அருவிப்
பீடு கெழு மலையன் பாடியோரே!"
(புறநானூறு – 124).

புள் இடை தட்ப = பறவைகளைக் கொண்டு சொல்லப்படும் குறிகள் (நிமித்தங்கள்) தடுக்க.

"ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே!"
என்பதும் புறநானூறு. தட்கும் = தடுக்கும்.

"நட்புநார் அற்றன நல்லாரும் அஃகினார்
அற்புத் தளையும் அவிழ்ந்தன – உட்காணாய்
வாழ்தலின் ஊதியம் என்னுண்டாம் வந்ததே
ஆழ்கலத் தன்ன கலுழ்" (நாலடியார் – 12).

பொருள்:
நட்பு என்னும் நார் அறுந்துபோயிற்று.
நல்லவர்கள் நாடி வருவதும் குறைந்துவிட்டது.
அன்பாகிய கட்டுக்கோப்புகள் அவிழ்ந்து விட்டன.
உள்ளத்தில் எண்ணிப் பார்!
உயிரோடு வாழ்வதால் என்ன பயன்?
வாழ்நாள் என்னும் கப்பல் கடலில் மூழ்குவது போன்று அழுகை வருகிறது,
இதுதான் வாழ்க்கை!

"தளைக்கின்ற மாயக் குடும்பப் பெருந்துயர்
தாங்கிஅந்தோ

இளைக்கின்ற ஏழைக் கிரங்குகண் டாய்சிறி
தேஇறகு
முளைக்கின்ற போதறுப் பார்போல்நின் னாம
மொழிந்திடுங்கால்
வளைக்கின்ற மாயைக்கிங் காற்றேன்முக்
கண்ணுடை மாமணியே!" (திருவருட்பா).
தளை – தளைக்கின்ற.

யாப்பிலக்கணத்தில் இரண்டு சீர்களைத் தளைப்பதும் தளை எனப்படும். ஏழு தளைகள் உண்டு.

தளை – தளையம் = விலங்கு,
"இளையவர் நெஞ்சத் தளையமெ னுஞ்சிற்
டைகொடு வஞ்சிக் கொடிபோல்வார்
இணையடி கும்பிட் டணியல்குல் பம்பித்
திதழமு துந்துய்த் தணியாரக்"
(திருப்புகழ்– 551).

தளையாள் – காலில் தளையிடப்பட்ட அடிமை– fettered slave,
"தனக்கொன்றும் பயனின்றித் தளையாளென்
றான்வருந்தி யெனைப்பெருங் குப்பையு
மெருச்சுமப்பாற் கண்டக்கால் நினைப்பதொன்
றுடைத்தவன்செய் நெடும்பாவ நிச்சலும்
மனக்கினிதா வவன்றன்னை யாள்வார்மாண்
புரையாயோ!"
(நீலகேசி – 185).

தள் – தடு – தடங்கு – தடங்கல்.
பனை ஓலைகளைக் குறுக்கும் நெடுக்குமாகத் தடுத்துப் பின்னும் இருக்கை ஓலைத் தடுக்கு எனப்படும்.

கள் – கவ் – கவவு = கலத்தல், அணைத்தல்.
தள் – தவ் – தவிசு = இருக்கை,
"தாலப் புல்லின் வால்வெண் தோட்டுக்
கைவன் மகடூஉக் கவின்பெறப் புனைந்த
செய்வினைத் தவிசிற் செல்வன் இருந்தபின்"
(சிலப்பதிகாரம்)

தவிசு = தடுக்கு, இருக்கை.

தவ் – தவக்கம் = தடங்கல்.
'எதற்கெடுத்தாலும் தவசு / தவசல் /தவக்கம் சொல்லாதே' என்பது பேச்சு வழக்காக உள்ளது.

தள் – (தளை) – தாள் – தாள்வாய் – தாவாய் – தாவங்கட்டை – தவட்டை – தாடை.
(முக வாய் – மாவாய்).
தள் – தாள் – தாழ் – தாழ்ப்பாள் – தாழக்கோல் – தாக்கோல் (சாவி).

கைத்தள் – கைத்தளை – கைத்தளை செய் > கைது செய்.
கைத்தளை செய்யப்படுபவர் = கையில் தளை உடையவர் = கைத்து > கைத்தி > கைதி.

மன்னராட்சிக் காலங்களில் கைகளை நாரினாலோ, துணியினாலோ, இரும்புத் தொடரியினாலோ பிணித்திருப்பர். இப்போது இரும்பினால் ஆன விலங்கினைப் பூட்டுகின்றனர்.

"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
ஆள் அன்று என்று வாளில் தப்பார்
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
கேள் அல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை இன்றி வயிற்றுத்தீத் தணியத்
தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்ம ரோ இவ் உலகத் தானே?" (புறநானூறு– 74).
தொடர்ப்படு ஞமலி = தொடரி(சங்கிலி)யில் பிணிக்கப்பட்ட நாய்.
போரில் சிறைப்பட்ட சேரமான் கணைக்கால் இரும்பொறை இப்படித் தான் இழுத்துவரப்பட்டதாகப் பாடிய பாடல்!

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே!"
(திருநாவுக்கரசர் தேவாரம்).

நாவுக்கரசர் உடலோடு கல்லைக் கட்டிக் கடலில் வீசினர் சமணர்; ஐந்தெழுத்து ஓதி மீண்டார் என்பர்.

கை விலங்கு – handcuffs,
கை, கால் விலங்கு – shackles,
மரச் சட்டங்களில் தலை, கைகளை மாட்டுதல் – pillory.
கூண்டில் அடைத்துத் தொங்கவிடல் – gibbet.

விலங்கு – விலங்குதல் = குறுக்கிடுதல் = தடுத்தல்,

"ஏறு பெற்று உதிர்வன போல் வரை பிளந்து
இயங்குநர்
ஆறு கெட விலங்கிய அழல் அவிர் ஆரிடை"
(கலித்தொகை – 2).

பொருள்: வழிச்செல்வார் செல்வதற்கு இயலாதவாறு பாதையை அடைத்துக்கொண்டு கிடக்கும் அனல் வீசும் செல்வதற்கரிய வழியில்.

"போக்கு அற விலங்கிய சாரல்
நோக்கு அருஞ் சிறு நெறி நினையுமோரே!"
(நற்றிணை – 104).

விலங்கிய = தடையாய் அமைந்த.

"பொலங் கழற்காற், புலர் சாந்தின் 15
விலங்கு அகன்ற வியன் மார்பு!" (புறநானூறு – 3).

விலங்கு அகன்ற = குறுக்கிலே அகன்ற.

நெடிதாக வளரும் மாந்தரைப் போலன்றிக் குறுக்காக – விலங்கி வளர்பவை விலங்குகள் எனப்படும்.

"இலங்கைமன்ன னைந்தொடைந்து
பைந்தலைநி லத்துக,
கலங்கவன்று சென்றுகொன்று
வென்றிகொண்ட வீரனே,
விலங்குநூலர் வேதநாவர்
நீதியான கேள்வியார்,
வலங்கொளக்கு டந்தையுள்கி
டந்தமாலு மல்லையே?"

(நாலாயிரம் – 807, திருமழிசையாழ்வார் திருச்சந்த விருத்தம் – 56).

{ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் எழுதிய விளக்க உரை: முற்காலத்தில் இராவணனுடைய பத்தாகிய வலிய தலைகள் பூமியிலே விழுந்தொழியவும் அரக்கன் அஞ்சிக் கலங்கவும் இலங்கையிற் புகுந்து (அவனைக் கூட்டத்தோடு) கொலை செய்து விஜயம் பெற்ற மஹாவீரனே! உடம்பிலே யஜ்ஞோபவீதத்தையுடையவரும் வேதங்களை நாக்கின் நுனியிலோ உடையரும் (நல்லாசிரியர் பக்கலிலே) ஸாரமான அர்த்தங்களைக் கேட்டுணர்ந்தவர்களுமான வைதிகர்கள். வழிபாடுகள் செய்யும்படியாக திருக்குடந்தையிலே திருக்கண் வளர்ந்தருளா நின்ற ஸர்வேச்வரனும் நீயன்றோ இப்பாட்டுமுதல் மேல் ஆறு பரசுரங்களாலே, திருக்குடந்தையில் திருக்கண் வளர்ந்தருளுகிற படியை அநுபவிக்கிறார்.}

விலங்கு = உடல். நூலர் = பூணூல் (யஜ்ஞோபவீதம்) அணிந்தவர். (ஆன்மாவை)ஆதனைத் தடுத்துவைத்திருக்கும் உடல் விலங்கு எனப்படுகிறது.

புறநானூற்றில் கூறப்படுமாப் போலே – ஒக்கல் வாழ்க்கை கால்களைத் தளையிடுதல் போல – பாதங்களைத் தளையிட்டுப் பிணித்தல் – fetter.

பாதம் > foot > fetter.

fetter (n.)

Old English fetor "chain or shackle by which a person or animal is bound by the feet," figuratively "check, restraint," from Proto-Germanic *fetero (source also of Old Saxon feteros (plural), Middle Dutch veter "fetter," in modern Dutch "lace, string," Old High German fezzera, Old Norse fioturr, Swedish fjatter "fetter"), from PIE root *ped- "foot." The generalized sense of "anything that shackles" had evolved in Old English.



# மாற்றுச் சக்கரம்

இலக்குவனார் திருவள்ளுவன்
தலைவர் – தமிழ்க் காப்புக் கழகம்

ஆங்கிலத்தில் இஃச்டெப்னி (stepney) என்றால் வழக்கத்தில் கூடுதலாகச் சேர்த்துக் கொண்ட துணையைக் குறிப்பதாக மாறிவிட்டது. என்றாலும் ஊர்திகளில் மாற்றுச் சக்கரத்தைக் குறிப்பதே உண்மை.

வால்டர் தேவீசு (Walter Davies) என்பவர் தாம் (Tom) என்பவருடன் சேர்ந்து இங்கிலாந்திலுள்ள வேல்சு நகரின் இலாநெல்லி (Llanelli) பகுதியில் இஃச்டெப்னி (stepney) தெருவில் 1895இல் இரும்புப் பொருள்கள் கடை தொடங்கி 1902இல் வாடகை ஊர்திப் பிரிவையும் தொடங்கினர். 1904இல் நீதிபதி ஒருவர் வாடகைக்கு எடுத்த ஊர்தியின் (சக்கரத்தின்) புறவட்டில் (tyre) துளை ஏற்பட்டுக் காற்றுப் போனதால் மாற்றுச் சக்கரம் பொருத்த அல்லல்பட்டார். அப்பொழுது அவர்களுக்கு நாம் ஏன் உதிரியாக ஒரு மாற்றுச் சக்கரத்தை முன்னரே ஊர்தியில் இணைத்து வைக்கக் கூடாது என்ற எண்ணம் ஏற்பட்டது. அதன் விளைவே மாற்றுச்சக்கர முறை கண்டுபிடிப்பு. என்றாலும் மாற்றுச் சக்கரத்தின் பெயராக இந்நிறுவனம் இருந்த தெருவின் பெயர் நிலைத்து விட்டது. எனவே, இஃச்டெப்னி (stepney) என்பது தெருவின் பெயராக இருந்தாலும் மாற்றுச் சக்கரத்தைக் குறிப்பதாக அமைந்தது.

ஆனால் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ் மக்கள் மாற்றுச் சக்கரத்தின் தேவையை உணர்ந்து கண்டுபிடித்துப் பயன்படுத்தி உள்ளனர். அதன் பெயர் சேம அச்சு அல்லது சேமச் சக்கரம் என்பதாகும்.

"கீழ் மரத்து யாத்த சேம அச்சு அன்ன" (புறநானூறு 102) என்கிறார் ஒளவைப் பிராட்டியார்

"வணிகர்கள் பாரத்தை ஏற்றிக்கொண்டு வண்டியை ஓட்டிச் செல்லும் பொழுது மேட்டிலும் பள்ளத்திலும் ஏறி இறங்கி வண்டிச் சக்கரம் உடைந்து விட்டால் மாற்றுப் பயன்பாட்டிற்காகப் பாதுகாப்பாகக் கொண்டு செல்லப்படும் சேம அச்சு போன்றவரே" என மன்னரைப் புகழும்பொழுது நமக்கு இந்த அறிவியல் சொல் கிடைத்து விட்டது.

இடர்ப்பாடு இல்லாத பயணத்தைப் பற்றிய சிந்தனை ஏற்பட்டு அவசரத் தேவையின் பாதுகாப்பை முன்னிட்டு மாற்றுச் சக்கரம் கண்டறிந்த தமிழர்கள்தாம் இன்றைக்கு வாழ்க்கைப் பயணத்தைத் தொலைத்து இனத்தைப் பாதுகாக்க வழியின்றி இருக்கின்றார்கள்!

நன்றி : அன்றே சொன்ன அறிவியல்



# பல்லியாடிய- புறநானூற்று உழவியல் கலைச்சொல்


பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,

அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.


இலக்கியங்களால் கதை, வரலாறு, பண்பாடு, முருகியல், விழுமியங்கள், நிலைபேறுடைய மானிட மதிப்புகள் ஆகியவற்றோடு பல்துறைக் கலைச்சொற்- களையும் அறியலாகின்றது. மக்களை/ மானுடத்தை மையமிட்டுப் படைக்கப்பட்ட சங்கச் செய்யுள்களில் இவை இயல்பாகப் பயில்கின்றன.

"வெப்புள் விளைந்த வேங்கை... என்று தொடங்குகின்ற, வேள்பாரியைக் கபிலர் பாடிய புறநானூற்றின் 120ஆம் பாவின் தொடக்கத்தில் வரகு / தினைப்புல உழவியல் விளக்கப்பட்டுள்ளது. மழை பொழிந்து ஈரமான நிலத்தைப் புழுதியாகும்படி பல முறை உழுது, வித்திட்டுக் களையைக் கருவியால் அகற்றி, விளைந்த பின்னர் அறுத்தனர் என்று படம்பிடிக்கப்பட்டுள்ளது.

இதன் 04ஆம் அடியில், பல்லியாடிய........ என்று பெயரெச்சமாகப் பல்லியாடல் என்னும் உழவியல் கலைச்சொல் ஆளப்பட்டுள்ளது. இது வயலில் கருவியால் களையை அகற்றலைச் சுட்டுகின்றது. உ.வே.சாமிநாதர் இப் பாவின் குறிப்புரையில் (கு – ரை.). பல்லியாடுதல், தாளியடித்தல், ஊடடித்தலென்பன ஒரு பொருட்சொற்கள்; அது நெருங்கி முளைத்த பயிர்களை விலக்குதற்கும் வருத்தமின்றிக் களை பிடுங்குதற்குமாகக் கீழ்நோக்கியுள்ள கூரிய பல முனைகளையுடைய பலகையின் இரண்டு பக்கத்தும் மேற்புறத்திலுள்ள வளையங்களிற் கட்டிய கயிறுகளைச் சேர்த்துப் பூட்டிய நுகத்தை வாய் கட்டப்பட்டுள்ள எருதுகளின் பிடரியில் வைத்துப் பூட்டி உழச்செய்தல். என்று விளக்கியுள்ளார்.

இதனால் சங்க கால மக்கள் உழவில் மிக்கிருந்ததையும் பல கருவிகளைப் பயன்படுத்தியதையும் அறியலாம்; அதோடு இத்தகைய விவரணை வேளாண் கருவிகளை வடிவமைக்கவும் வாய்ப்பாகும். சங்கப் பாக்களின் இவ்வாறான பதிவுகளைப் பின்வந்த திருக்குறள் போன்ற இலக்கியங்களும் பயன்படுத்திக் கொண்டன. இத்தகைய அரிய உரை விளக்கங்களை வெளிப்படுத்தின் இலக்கியப் பொருண்மை எளிதில் தெளியலாகும்.

நன்றி : இணையத் தரவுகள்

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 193,194–ஆம் கூட்டங்கள்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 193, 194ஆம் கூட்டங்கள் முறையே 18.11.2025, 25.11.2025 ஆகிய இருநாள்கள் நடைபெற்றன.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற கூட்டங்களில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை ஆகியோர் பங்கேற்றனர். மேலும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, மேனாள் ஆங்கில விரிவுரையாளர் முனைவர் ஆ.அரிமாப்பாமகன் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர்.

இவ்விரு கூட்டங்களிலும் சேர்த்து மொத்தம் 539 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

## ஏற்பளிக்கப்பட்டுள்ள சொற்களுள் சில:

| | |
|---|---|
| Ability to repay | கடன் திருப்புத் திறன் |
| Abusive tax shelter | வரிச்சலுகை ஏய்ப்பு |
| Accrued tax | திரள் வரி |
| Acting commissioner | பகர ஆணையர் |
| Actuarial valuation | காப்பீட்டு மதிப்பீடு |
| Adoption agency | மகவேற்பு முகமை |
| Advance designation | முன்கூட்டிய பதவி |
| Affinity fraud | ஈர்ப்பு ஏய்ப்பு |
| Alien authorized to work | பணியிசைவு அயலார் |
| Bubble zone | உச்சப் பகுதி |
| Mutual recognition | ஊடுறவு ஏற்பிசைவு |
| Number holder | எண் தாங்கி |
| Nutrition examination | ஊட்டவுணவு ஆய்வு |
| Retroactive benefits | பின்நோக்குப் பயன் |
| Secessionist | பிரிந்து செல்பவர் |
| Welfare spending | நலம்புரிச் செலவு |
| Work credit | பணி வரவு |
| Absorption chiller | உறிஞ்சு குளிரூட்டி |
| Analytic application | பகுப்பாய்வுச் செயலி |
| Autocomplete | தானியங்கு சீராக்கி |
| Biocuration | உயிரித் தரவு |
| Build operate transfer | நிறுவி இயக்கி மீள்ஒப்படைப்பு |
| Causality engine | காரணங்காட்டி |
| Data hygiene | தரவுச் செப்பம் |
| Data lake | தரவுக் களஞ்சியம் |
| Key horizon | முகாமை எல்லை |
| Virtual private cloud | மெய்ந்நிகர் தனியர் சேமிப்பகம் |

# நாளும் விளையும் சொற்கதிர்

கொள்கலச் சுமையுந்து
CONTAINER LORRY
நாளும் விளையும் சொற்கதிர்

சுமைதூக்கி
CRANE
நாளும் விளையும் சொற்கதிர்

நாளும் விளையும் சொற்கதிர்
City bus
மாநகரப் பேருந்து

நாளும் விளையும் சொற்கதிர்
VORTEX
நீர்ச்சுழல்

நாளும் விளையும் சொற்கதிர்
Hometel
உண்டுறையகம்
DIPR வெளியீடு: இயக்குநர், செய்தி மக்கள் தொடர்புத்துறை

நாளும் விளையும் சொற்கதிர்
Computer forensic
கணினிநுட்பத் தடயவியல்

நாளும் விளையும் சொற்கதிர்
KNEE WRAP
கால்மூட்டுறை

நாளும் விளையும் சொற்கதிர்
தொங்கு ஓகம்
AERIAL YOGA

# நாளும் விளையும் சொற்கதிர்
























# நாளும் விளையும் சொற்கதிர்






















